Acc. No. 14658
R65,31 9/1

உ
ஓம்
தத் சத்
பரப்பிர்மணே நம:

# ஆத்மானந்த போதம்.

இஃது
தஞ்சை
சென்னை-சூளை வேப்பேரி,
**ஸ்ரீலஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமி**
அவர்கள் அருளியது.



சென்னை-சூளை, சீதா பாக்டரி,
திருவாளர். வரதராசு நாயகர் அவர்களால்
அச்சியற்றி எல்லோருக்கும் நன்கொடையாக
அளிக்கப்பட்டது.

மேலும்
இந்நூலை அச்சியற்றி வெளியிட
விருப்பமுள்ளவர்கள் வெளியிடலாம்.

1952

ஸ்ரீ பாரதி பிரஸ், சூளை, மதராஸ்-7.

(28)

9/1

உ

ஓம்

தத் சத்

பரப்பிர்மணே நம:

# ஆத்மா னந்த போதம்.

இஃது

தஞ்சை

சென்னை-சூளை வேப்பேரி,

**ஸ்ரீலஸ்ரீ சிவகுமார மௌனகுரு சுவாமி**

அவர்கள் அருளியது.



சென்னை-சூளை, சீதா பாக்டரி,

திருவாளர். வரதராசு நாயகர் அவர்களால்

அச்சியற்றி எல்லோருக்கும் நன்கொடையாக

அளிக்கப்பட்டது.

மேலும்

இந்நூலை அச்சியற்றி வெளியிட

விருப்பமுள்ளவர்கள் வெளியிடலாம்.

1952

ஸ்ரீ பாரதி பிரஸ், சூளை, மதராஸ்-7.

ACC. NO. 14658

உ

ஓம்

# முகவுரை.

உலகத்தினிடத்தே மாந்தர்கள் சர்வ ஆன்ம கோடிகளின் எதார்த்த சொரூபத்தையும், அவைகளின் உற்பத்தி, லயம், செனனம், மரணம், முத்தி முதலிய உண்மைகளையும், மற்றும், இன்பம், துன்பம், ஞானம், அறிவு, மனம், மாயை, ஆசை, மோகம், பந்தம், காமம், கோபம், முக்குணம், இருவினை, முதலியவைகளையும், இன்னுமற்ற உண்மையான ஆத்மார்த்த ஞான விஷயங்களையும் அறியாதபடி பற்பல விதங்களாகக் கொண்டு அலைந்து துன்புற்று உழல்வதாகும்.

ஆகவே இவ்வுண்மைகளை ஆண் பெண் முதலாகச் சிறுவர்கள் முதற் பெரியோர்கள் வரையிலும், பாமரர் முதற் பண்டிதர்கள் வரையிலும் மிகச் சுலபமாக அறிந்து அந்நிலையும் அப்பேற்றையும் அடைந்துய்ய வேண்டுமென்கிற உத்தேசத்தையும் ஆவலையும் கொண்டே, மிக எளிமையாகவும், சுருக்கமாகவும், விளக்கமாகவும் இச்சிறிய நூலை இயற்றி உலகிற்கு உபகாரமாக வெளியிட்டதாகும்.

ஆதலின் இதை எல்லோரும் கற்று மெய்யுணர்வால் உற்றுணர்ந்து அவ்வுண்மைகளை அறிந்து அந்நிலையும் அப்பேற்றையும் அடைந்துய்யப் பெறுவீர்களாக.

---

## உள்ளுறை

உ
ஓம்
தத் சத்
பரப் பிர்மணே நம

# ஆத்மா னந்த போதம்

பொருள் வணக்கம்

**எழுசீர் விருத்தம்.**

ஆதியு மந்தம் நடுவெது மின்றி
அகண்டமா வெளியதாய் நின்றும்
நீதியா யண்டஞ் சர்வமு மனாதி
நினைவினு லளித்தெலாந் தன்னுள்
தீதிலா வைத்து மன்புடன் காத்துச்
சேர்த்திடும் பரமதா யென்றும்
போதமா வடிவாய் விளங்கிடு மோனப்
பொருள்தனைச் சிந்தைசெய் திடுவாம். 1

முத்தொழில் செய்தற் கேதுவாய் நிற்கும்
மூவரு மண்டங்கள் யாவும்
அத்தனை யெல்லாம் படைத்தருட் செய்யும்
ஆதிகா ரணனனுய்ச் சர்வ
வித்தகப் பொருளாய் நின்றுதா னென்றும்
விளங்கிடும் பூரணு னந்த
நித்தியப் பொருளாந் தன்னையே தினமும்
நெஞ்சகந் தன்னுள்வைத் திடுவாம். 2

மூவரும் தேவர் இந்திரன் முதலாய்
முனிவரும் சித்தர்கள் மற்றும்
யாவரும் மறையும் சுருதிகள் பலவும்
அகமுதற் கருவிகள் யெல்லாம்
மேவியும் தேடிக் காணுு நின்றே
விளங்கிடும் பிரமமா யெந்தப்
பாவனை இன்றி யருவமாய் நிற்கும்
பரம் பொருள் தனைநினைந் திடுவாம். 3

# நூல்.

## பிரம ஆன்ம பிரிவினை ஐக்ய இலக்கணம்.

அறுசீர்.

ஆதியில் அண்ட மற்றும் யாவையு மின்றி யெந்த
நாதமும் உருவு மின்றி நடுவுடன் கீழ்மே லின்றி
ஓதவும் ஒண்ணு நின்ற ஒப்பிலாப் பிரமம் தன்னுள்
தீதிலாச் சங்கல்பத்தாற் செகமுதற் தோற்றந் தானே. 1

கடல்தனிற் துளியு மிக்க கனல்தனிற் பொரியும் தோன்றி
திடமுடன் செல்லு மாப்போற் சீவர்க ளெல்லாம் முன்பு
கடவுளின் வடிவில் நின்றே காணவும் தோன்றிப் பின்பு
உடலெனும் உருவிற் சேர்ந்தே உலகினில் நிற்கும் தானே. 2

நித்தியா னந்த மென்னும் நிர்க்குணப் பொருளாய் நிற்கும்
சுத்தமாம் பரத்திற் தோன்றித் தூய்மைசே ரான்மா வென்றே
புத்தியும் அறிவும் தூய போதமும் சருவி மற்றும்
சித்தமும் பண்பி னோடும் சேர்ந்துறும் உடலிற் தானே. 3

ஆதியிற் சீவர் தம்மை அளித்தஅப் பொழுதே இந்தப்
பாதியா உடலை யெல்லாம் பரமதே அளித்து மேலும்
கோதிலா உணர்வும் சிந்தை குணமுடன் போதம் வைத்தான்
தீதிலாத் தன்னைக் கண்டும் சென்ம மற்றிருக்கத் தானே. 4

காயமும் உற்ற ஆன்மா கருதியே உளம் உணர்வை
தூயநல் வழி செலுத்திச் சுகமுடன் வாழாத் துன்பாம்
தீயபல் வழியில் விட்டுச் சிந்தையும் உணர்வும் கெட்டு
நாயதாய்ப் போக முற்றே நானிலத் தலையும் தானே. 5

வாரிதி நீரும் சுத்த மாரியாய் விழவே இந்தப்
பாரினில் அழுக்குச் சேர்ந்து படிந்துறும் தம்மை போலச்
சீருறும் தூய ஆன்மாச் சிந்தையும் அறிவு தன்னுள்
காருறும் அஞ்ஞானந் தான் கவிந்துபின் மூடும் தானே. 6

அறிவுடன் ஆன்மா உள்ளம் அஞ்ஞானத் தாலே மூடி
உரியதாம் ஞான மற்றும் உகந்தமெய்த் தவமும் விட்டுப்
பரிவுடன் போக முற்றே பற்றிடும் இரு வினையாற்
செறிதுயர்ப் பவமு முற்றே செகத்தினி லலையும் தானே. 7

ஆணுடன் பெண்ணு மாக ஆதியிற் பரத்திற் தோன்றிப்
பூணுமவ் விரண்டின் போகப் புணர்ச்சியாற் கரு வுண்டாகிக்
காணுமவ் வுருவா லிந்தக் காசினி விரிந்தும் பின்பு
வானுடன் ஐம்பூ தத்தால் வையகம் அழியும் தானே. 8

மீண்டும் பல்காலம் சென்று மேதினி யெல்லாம் முன்போற்
தோன்றியே பரத்தில் நின்றும் சொரூபமாய்த் தேக முற்றுப்
பூண்டும்பின் மாயை தன்னைப் புலன்களும் அறிவும் கெட்டு
மாண்டிடும் போகமுற்றே வையகத் துழலும் தானே. 9

சகத்துறும் பவமாம் துன்ப சாகரம் தன்னுள் மூழ்கி
அகத்தினுள் அளவில் துன்பாம் அலைகளால் அடியும் பட்டு
மகத்துறும் சுகமும் உண்மை வடிவமும் தன்மை காணா
திகத்தினுள் விலங்கின் கீழாய் இச்சையுற் றலையும் தானே. 10

சுத்தமில் லாப் பளிங்கிற் றோன்றிடா வடிவைப் போன்று
சித்தத்துள் வஞ்ஞா னத்தின் திரையினால் அறிவிருந்தும்
சத்தியம் பொய்மை காணாத் தன்னையும் பிரமம் காணா
நித்தியம் வினையின் மார்க்கம் நீணிலத் தலையும் தானே. 11

தந்தைதாய் மனைவி சுற்றம் தனயரும் பொருள்பொன் பூமி
பந்தமும் முற்றே இந்தப் பாரினை மெய்யாய்க் கொண்டே
சிந்தையுள் ஆசை யென்னும் தீர்ந்திலாச் சுழல்காற் றுற்று
சந்ததம் அலைந்தும் துன்ப சாகரம் மூழ்கும் தானே. 12

நாயதாய் அலைந்தும் நீர்சேர் நரகுழல் பன்றி போன்றும்
பேயதாய் ஈயாக் காத்தும் பெரும்கடாப் போலுழைத்தும்
நோயதும் பலதால் வாடி நொந்து யெல் லாம்வெறுக்கக்
காயமும் முதிர்ந்தும் சாவைக் கருதியே நிற்கும் தானே. 13

கண்ணுடன் அறி விருந்தும் கல்வியும் கேள்வி யுற்றும்
மண்ணுறும் நிலைமை யெல்லாம் கண்டும்பின் மாயை தன்னாற்
தன்னையும் இன்ப போகம் அறிந்திலாச் சடம் நாமென்று
எண்ணிலாக் காலம் தோன்றி இறப்பதாய் அலையும் தானே. 14

அய்யகோ பவமு முற்றே ஆன்மாவும் அலைந்தும் பல்கால்
உய்யவே வழியும் தேடா துலகுறும் வழியிற் சென்றும்
பொய்யதாம் போக முற்றே புலனெனும் குரங்கி னோடு
செய்தவம் இன்றி இந்தச் செகத்தினில் அலையும் தானே. 15

சென்மங்கள் நூற்றில் ஆன்மா செய்த நல்வினைக ளென்னும்
கன்மங்கள் எல்லாம் சேர்ந்தே காணும்நற் சென்மம் பெற்று
நன்மைசேர் கருமம் புண்ணியம் நாடிநல் லொழுக்கம் அன்பும்
உண்மையும் தவமு முற்றே உலகினில் நிற்கும் தானே. 16

காமிய மில்நிஷ் காமிய கருமமும் பெரும் தவத்தாற்
பூமியில் அரிதாம் சென்மம் பொருந்திச் சற்குருவைப் பெற்றுப்
பாமரர் நிலைமை யற்றுப் பரகுரு வழியில் நின்று
நேமமும் அற்று ஞான நிலைதனுட் சேரும் தானே. 17

ஆசையாம் மூன்றும் பாழும் அஞ்ஞான முடனே பந்த
பாசமும் வினையும் ஞானப் பரிதியின் றுதித்த போதே
நாசமும் உறவே தன்னை நாடியே காணப் பெற்றுப்
பேசவும் வொண்ணு இன்பப் பேற்றினைக் கொள்ளும் தானே. 18

ஞானமா நிலையைப் பெற்று நாசன முற்றே யெல்லாம்
தானெனும் உருவைப் பெற்றுச் சச்சிதா னந்த முற்றுப்
பூனை இன்பநித் திரை பொருந்திச் சும்மா இருக்கும்
மோனமா நிலையைப் பெற்று முத்தியிற் சேரும் தானே. 19

கடல்தனில் வீழ்ந்தோன் மிக்க காலமாய்ப் பட்ட தெல்லாம்
படவனுல் நீங்கி வீட்டைப் பற்றுவன் போல ஆன்மா
நடமெனும் உலகிற் சென்ம சாகரம் தன்னை மிக்கத்
திடமுடன் குருவாற் தாண்டிச் சேர்ந்திடும் முத்தி வீடே. 20

பொரிதுளி அனலில் மற்றும் பொங்குமா கடலிற் தோன்றி
பிரிவுற்றே நின்றும் பின்பு பெற்றிடும் தன்மை போன்று
அரியதாம் ஆன்மா மீண்டும் அகண்ட பரிபூர ணத்துள்
உரியதாய்ச் சேர்ந்து முன்போல் ஒன்றென விளங்கும் தானே. 21

சச்சிதா னந்த மென்னும் தன்சுய வடிவைக் காணு
திச்சையும் அலைச்சல் பாடும் இறப்புடன் பிறப்பும் பந்தம்
அச்சமும் இன்ப துன்பம் அடைந்திடும் சர்வம் நீத்து
நிச்சலும் பரமா னந்த வடிவ மாய் நிற்கும் தானே. 22

## மனத்தின் இலக்கணம்

அறுசீர்.

சச்சிதா னந்த மென்னும் தற்பர வடிவாம் ஆன்மா
இச்சகந் தன்னில் வந்தும் இருவினைப் பவமு முற்று
நிச்சலும் அலைந்தே நின்றும் நிசஉருக் காணு தென்னில்
துச்சமாம் மன மிதற்குக் காரண மெனச்சொல் வாயே. 1

மனமதும் உண்டே லிந்த மானில முதலாய்ச் சர்வ
இனமதும் விளங்கித் தோன்றும் இறந்திடில் மனந்தா னிந்த
வினையுறும் உலகம் காணு திலங்குமா வெளியாய்க் காணும்
புனைமனம் தோன்றில் மீண்டும் புவனமும் எல்லா முண்டே. 2

அன்புடன் வெறுப்பு மிக்க அச்சமும் பேதா பேதம்
இன்புடன் துன்பம் மாயை இச்சையும் துவேஷ மற்றும்
தென்புடன் பவமும் முத்தி சேர்க்கு மெய்ஞ் ஞானத்திற்கும்
வன்கொடும் இரு வினைக்கும் காரணம் மனம தாமே. 3

பாழுறும் மனத்தா லிந்தப் பாரினிற் சீவ ரெல்லாம்
கீழுறும் பவமு முற்றுக் கெட்டலைந் தழியா நின்றார்
வாழுறும் நாளி லிந்த மனந்தனைத் திருப்பி அன்பாய்
மேலுறும் வழியில் விட்டால் மேவிடும் இன்பம் தானே. 4

வனமுறும் குரங்கைப் போன்று மனமதும் அங்கு மிங்கும்
சனமதும் நிற்கா தோடிச் சார்ந்து மோர்நிலையில் நில்லாத்
தினமும்நீ அதனை நாடிச் சேர்த்ததை மெள்ள மெள்ளத்
தனையுறும் ஞான மார்க்கம் சார்ந்திடச் செய்கு வாயே. 5

காற்றிடும் அதிக மான கடு வேகமா மனத்தை
மாற்றியோர் நிலையில் நிற்க வைப்பதோ அரிய தாகும்
போற்றிடும் மௌனம் தியானம் பொருந்திடும் நிராசை யாலும்
ஆற்று மெய்ச் சாதனத்தாற் குருவினால் அடங்கும் தானே. 6

ஆதியில் மனந்தான் தூய அமிர்தமா யிலங்கி நிற்கும்
பாதியா உலகின் மார்க்கம் பற்றிடாத் தடுத்து முன்பே
தீதிலா நன்மார்க் கத்தில் சென்றிடப் பழக்கி வந்தால்
ஓதவும் வொண்ணு இன்ப உருவமாய் இலங்கும் தானே. 7

பாலரைப் பெற்றோ ரந்தப் பருவத்தே நாடி நல்ல
சீலமாம் வழிகள் தன்னிற் செலுத்தியே பழக்கி மிக்கச்
சாலவும் நலராய்ச் செய்யும் தன்மைபோல் மனத்தை முன்பே
ஞாலத்தின் வழியிற் செல்லா தடக்கினால் நன்மை தானே. 8

அன்பினாற் பயத்தி னாலும் அடியினாற் கடும்சொல் லாலும்
தென்பினாற் பெற்றோர் தங்கள் சிறுவரை அடக்கு மாப்போல்
வம்புறும் மனத்தை உன்றன் வழிதனில் அடக்கி மேலாம்
இன்புறும் வழியில் விட்டே இனிதுறப் பெறுவாய் நீயே. 9

அரசனும் மற்று மிந்த அவனியில் நிகரில் லாத
திரமுறும் தீரன் தானும் தீரனும் அல்ல மிக்க
விரைவுறும் மனத் தடக்கும் வீரனே தீர னாகும்
தாணியில் மற்றோ ரெல்லாம் மனத்திற்குத் தாசர் தாமே. 10

பத்தியும் தவமும் பூசைப் பல்விதக் கிரியை சுத்தம்
வித்தையும் சற்சங் கத்தில் மேவுதல் கேள்வி மற்றும்
நித்தியம் செபம் தியானம் நேர்மைசேர் யோக மெல்லாம்
சித்தமாம் மனம் தெளிந்தும் ஒடுங்கிடச் செய்தற் காமே. 11

மனமிகத் தெளிந் தொடுங்கி மாசில்நீர்க் குணமாய் நின்ற
சனத்திலே இன்ப போகம் சார்ந்திடும் மனந்தா னெந்தத்
தினத்திலும் ஒடுங்கி நின்றாற் சிற்பர நிலையாம் நோய்ந்து
தனதுள்இல் லா தொழிந்தாற் தற்பர வடிவம் தாமே. 12

சருவமும் அற்று இன்பச் சாஸ்வதப் பதவி வேண்டிற்
பெருமைசேர் மௌன முற்றுப் பிரிவுறுத் தியான முற்றால்
மருவிடும் மனமும் ஆசை மாயையும் சினமும் துன்பம
இருவினைப் பவமும் நீங்கி இகபர முத்தி யாமே. 13

இருளும்வன் பலமும் கொண்ட இணையிலா வடிவாய் நிற்கும்
பெரியதாம் மாயை யென்றும் பிரித்திட முடியா தென்றும்
மருளுறும் மாந்தர் கூறி வகையிலா துழல்வன்று ருண்மை
அறிவினாற் பார்க்கில் மாயை அகத்துட்சங் கல்பந் தானே. 14

பரமசற் குருவா லின்று பார்த்திடப் பெற்றேன் மிக்கத்
திரமுறும் மனமும் மாயைச் செய்கையும் ஏமாற் றத்தை
விரைவுடன் அதனை நீத்து மேலதாம் நிலையுட் சேர்ந்து
உரியவென் வடிவைப் பெற்று உயர்பர மாய்நிற் பேனே. 15

## மனத்தை அடக்குமிலக்கணம்.

ஓடிடும் மனமே வாடா உனைவிடேன் ஒழிந்திட் டாலும்
தேடியும் பிடித் தடித்துச் சிதைந்திடக் கொல்வே னுன்னை
நாடியும் எனையே மாற்றி நாயென அலைய விட்டு
வாடியும் வருந்தச் செய்தாய் மடையனே உனைவி டேனே. 1

ஈனமு முற்ற நீதான் யென்தனை மடக்கிச் சூதாய்
ஊனக்கண் இல்லான் போன்றும் உழுத்தனைப் போன்றும் ஆட்டி
வானவர் முனிவர் சித்தர் மாதவர் மற்றோ ரெல்லாம்
நானிலந் தன்னில் என்னை நகைத்திடச் செய்தாய் நீயே. 2

இன்புடன் நானுனக்கு இயம்பிடும் வழியைக் கேட்டு
அன்புடன் அமர்வா யல்லேல் அகன்றும் நீயெங்கு மோடாத்
தென்புடன் பிடித்துக் கட்டித் தீவிரமா யடித்துத்
துன்புடன் வாடிச் செத்துத் தொலைந்திடச் செய்குவேனே. 3

பட்சமா யுனக்குச் சொன்ன படியும்நீ நிற்கா விட்டால்
இச்சையாம் கால்கள் தன்னை இலங்கறி வாளால் வெட்டிச்
துச்சனே ஞானத் தீயுட் துள்ளிடாக் கட்டிப் போட்டு
இச்சனம் சாம்பற் செய்வேன் இதனை நீ அறிகு வாயே 4

உன்னாலே யானும் கெட்டேன் உனைஅடக் காத தாலே
என்னாலே நீயும் கெட்டாய் இருவரும் தன்னாலே தாம்
மின்னுறும் வாழ்வை மெய்யாய் விரும்பியே அலைந்தும்கெட்டோம்
நம்முருப் பெற்றே இன்பாய் நாம்சுக மாய்வாழ் வோமே. 5

உன்னை நானடக்கி யென்னுள் ளொடுங்கிடச் செய்யு மட்டும்
பின்னைவே றெங்கும் விட்டுப் பிரிகிலேன் உண்மை கண்டாய்

என்னைநீ யேமாற் றிவே றெங்கினும் ஓட வெண்ணும்
நன்னயக் கபடம் தன்னை நாடிடா தொடுங்கு வாயே. 6

யோகமா நிலையில் ஓடா தொடுங்கியே மறைந்து நின்று
மோகமா யெழுந்து மீண்டும் முடுகின்றாய் மூடா நின்னை
வேகமாய் மோனவீட்டுள் வெளிவராத் தள்ளிப் பூட்டிச்
சாகவே செய்வேன் ஓயாத் தியானமாம் சத்தி யாலே. 7

## மனத்திற்கறிவுறுத்து மிலக்கணம்.

இன்பமும் சுகபோ கந்தா னிருந்திட என்றும் நம்முள்
அன்புடன் அறிந்தும் பெற்று ஆனந்த மாக வாழாத்
துன்புறும் விடய போகம் சுகமெனத் தேடிப் பெற்றுப்
பன்றிபோல் உழலன்றாய் மூடப் பாவிநின் மதியென் னெஞ்சே. 1

அந்தமாய் நம்முள் மிக்க அற்புதக் காட்சி யெல்லாம்
விந்தையாய்க் கண்டே இன்பாய் வீட்டிருக் காது பொய்யாம்
பந்தமும் துன்பமுற்ற காட்சிகள் பார்க்க வேண்டிச்
சந்ததம் தேடி நாய்போற் சகத்தினில் அலைந்தாய் நெஞ்சே. 2

அண்டங்கள் யாவு மீன்று அவையெலாம் அடுக்காய்த் தன்னுட்
கொண்டுதான் நிற்க வைத்தும் கோதிலாக் காத்து யாரும்
கண்டிலா துயிருடம்புள் அறிவினுட் கலந்து என்றும்
நின்றிடும் பொருளைநாடி நினைந்திடா திருந்தாய் நெஞ்சே. 3

தந்தையும் தாயு மாகிச் சருவமு மாகிப் பாச
பந்தமும் நீக்கும் ஞானப் பரகுரு வாகி நின்றும்
அந்தமில் இறையாய் நிற்கும் அரும்பொருள் தன்னை நாடாச்
சந்ததம் உண்டுறங்கி விலங் கெனத் தவித்தாய் நெஞ்சே. 4

ஈசனை நாடி யென்றும் இடையறாத் தியான முற்றுப்
பாசமும் ஆசை மூன்றும் பற்றிடும் அஞ்ஞானத்தை
நாசமும் செய்தும் தூய நற்சுய வடிவா யுன்னுள்
வாசமும் செய்யுமீசன் வடிவினைக் காண்பாய் நெஞ்சே. 5

எவ்வுயி ரெல்லா மொன்றாய் யெண்ணியே பேத மின்றி
அவ்வுயிர் களுக்கெல் லாம் நீ அன்புடன் ஆனமட்டும்
செய்வன யாவும் செய்தும் சிறிதும் துவேஷ மின்றி
மெய்வன வான அன்பு நிலைதனுள் மேவாய் நெஞ்சே. 6

வஞ்சமும் சினமும் தீமை வன்மையும் பொறாமை லோபம்
பஞ்ச பாவங்கள் தன்னைப் பகுத்தறிவா லுணர்ந்து
அஞ்சியே செய்திடாது அறமும் நல் லொழுக்கம் சாந்தம்
துஞ்சிடாப் பெற்றும் தூய சுயஉருப் பெறுவாய்நெஞ்சே. 7

துர்ச்சனர் சங்கமெல்லாம் தொலைத்துநீ மேன்மை யுற்ற
சற்சனர் சங்கந் தன்னைச் சந்ததம் மேவி நன்றாய்க்
கற்கவே உரிய உண்மை ஞான நூற்கற்றும் கேட்டும்
பற்பல விதம் கொள்ளாமற் பகுத்துணர்ந் துறுவாய் நெஞ்சே. 8

எறும்புகள் முதலா யிந்த இகத்துறும் உயிர்கள் கொள்ளும்
துறும்புறும் போகந் தன்னைச் சுகமென வெண்ணி நாடி
விரும்பியே பெண்கள் தன்னை மேவியே மகிழ்ந்து மந்தப்
பெரும்புணும் குழியில் வீழ்ந்து உழன்றனை பேதை நெஞ்சே. 9

நீருடன் மலமும் ஊத்தை நிணம் எலும் புதிரம் தோலும்
நாரெனும் நரம்பாற் கட்டி நாடும்கண் காதோ டெல்லாம்
சீருடன் அமைத்த பொம்மைப் பெண்ணெனத் தெரியாதந்தோ
பாரினில் மோக முற்றுப் பற்றினின் றலைந்தாய் நெஞ்சே. 10

கண்ணிரண் டில்லா மூடக் கழுதையும் கடாவைப் போன்று
பெண்களின் மோகமுற்றுப் பேணவே பொருளும் பொன்னும்
மண்ணுடன் பலவும் தேடி வாடியே அலைந்தும் சேர்த்தும்
எண்ணியும் பூட்டிப் பேயாய்க் காத்தனை யேழை நெஞ்சே. 11

தனமுடன் மனைவி மக்கள் தந்தைதாய் சுற்றம் மற்றும்
இனமுதற் செல்வம் யாவும் இலங்குமிவ் வுலக மெல்லாம்
கனவுறும் காட்சி போன்று கண்டும்நீ யாதும் பற்றாத்
தினமும்நீ உண்மை ஞான நிலைதனுட் சேர்வாய் நெஞ்சே. 12

ஊற்றையும் மலமும் நீரும் உதிரமும் எலும்பும் தோலும்
நாற்றமும் தசையும் கொண்டே நரம்பினாற் சேர்த்த கூடாம்
காற்றில்லா விட்டால் மாயும் கண்டும்நீ பற்று வைத்துப் [நெஞ்சே
போற்றியே களவும்! மோசம்! பொய்சொலி வளர்த்தாய் 13

கல்லுறும் வடிவ முற்றுக் கானகந் தனில் விலங்காய்ப்
பல்லுயிர் தம்மை மிக்கப் பதைபதைத் திடவே கொன்று
நல்லிருள் தனிற்பேய் போன்று நாறிடும் பிணத்தை உண்டு
எல்லையில் பாவமுற்ற இடும்பனாய் வாழ்ந்தாய் நெஞ்சே. 14

இன்றுதான் பிறகோ மற்றும் என்னேர மோதான் காண்பாய்
என்றுதான் இருந்த போதும் இறந்திடும் தேகம் கண்டாய்
கண்டுதான் இருந்தும் மற்ற உயிர்களைக் கருணை யில்லாக்
கொன்றுதான் உண்டு காத்தும் குக்கல்போல் வாழ்ந்தாய் நெஞ்சே.

கருணையும் அன்பும் கொண்டு கட்புலால் கொலையும் நீத்தால்
தருமத்திற் சிறந்த நல்ல தருமமா மென்று மிக்க
பெருமைசேர் பெரியோர் மற்றும் அறிஞரும் பேசா நின்றார்
அருமைசேர் அகிம்சை சாந்தம் அடைந்திடப் பெறுவாய் நெஞ்சே.

ஆசையாம் சுழலிற் பட்டு அலைந்தும்நீ துரும்பைப் போன்று
பாசமும் கொண்டு வாடிப் பரதவித் தழிந்திடாமல்
ஈசனால் கிடைத்த மட்டும் போதுமென் றின்ப முற்றுப்
பேசொணாச் செல்வ மென்னும் பேற்றினைப் பெறுவாய் நெஞ்சே.

கடும் கோபமுற்றே இந்தக் காசினி தன்னில் துன்பப்
படும்பா டிதுதானென்னே பாழுறும் மனமே கேளாய்
கெடும் புறம் கடுங்கோபத்தைக் கெடுத்துப சாந்த முற்று
முடிவிலாச் சுகவீடுற்று மோகமற் றிருப்பாய் நெஞ்சே. 18

அகந்தையைப் பெற்றும் உண்மை அறிந்திலா நான் நானென்று
சகந்தனிற் கெட்டலைந்தும் தவித்திடா அகந்தை தன்னை
உகந்து தாம் பெற்றோர்பட்ட உண்மையைத் தெரிந்தே விட்டு
சுகந்தரும் உண்மை ஞானச் சொரூபமாய் நிற்பாய் நெஞ்சே. 19

ஈய்கையும் சிறிது மில்லா இகத்தில்மா லோப முற்று
நாயென அலைந்தும் சேர்த்து நாடினோர்க் கெதுவு மீயாப்
பேயெனப் பூட்டிக் காத்தே அழிந்திடும் பேதை நீதான்
மேயதாம் தரும மார்க்கம் மேவியே அளிப்பாய் நெஞ்சே. 20

செகத்தினுட் சீவர் செய்யும் தீங்குறும் குற்ற மெல்லாம்
அகத்தினுட் கொள்ளா நோக்கி அந்தகன் வெறியன் பித்தன்
இகத்தினுட் குழந்தை செய்யும் குற்றம்போல் எண்ணி உள்ளே
நகைத்தும்நீ முனியா விட்டு நலமவர்க் கீவாய் நெஞ்சே. 21

## ஆன்மாவிற் கறிவுறுத்து மிலக்கணம்

சகத்துறும் இயல்பைப் போன்றிச் சடந்தனை நான் நானென்று
இகத்தினில் அலைந்தும் வீணாய் இறந்திலா விவேக மென்னும்
மகத்துறும் உணர்வா லுன்றன் வடிவினைக் கண்டு மிந்தச்
செகத்துறும் யாவும் நீத்துச் சிற்பர மாய்நிற் பாயே. 1

உன்னை நீஅறிந்தும் பெற்றே உன்வடி வாக நின்றாற்
தன்னையில் வேறுண் டோஇத் தாரணி தன்னிற் சேரும்
இன்னலும் மாயை பேதம் இச்சையும் சினமும் அச்சம்
நின்னையே பற்றா நீங்கி நித்திய னாய்நிற் பாயே. 2

ஒப்பிலா உணர்வா லுன்றன் உருவினைக் கண்டபோதே
எப்பவும் அழியா இன்பம் இணையிலாப் பொங்கி நின்று
இப்புவி தன்னிற் சீவர் இயல்புகள் யாவு மற்றுச்
செப்பொணா வடிவாய் நின்று திருநடம் செய்வாய் நீயே. 3

தானது எனு மிரண்டில் தன்மய மாக நிற்கக்
கோனெனும் உண்மை ஞானக் குருவினை அறிந்தும் பெற்று

ஈனமா மாயை மற்றும் யாவையும் நீத்து மேலாம்
ஞானமா உணர்வா லுன்னை நாடியே பெறுவாய் நீயே. 4

தன்னையே கற்றும் நாடித் தன்னுரு வைக்கா ணாமற்
பின்னைநீ யெதனைக் கற்றுப் பேயென அலைந்தாய் அந்தோ
நன்னய மாகக் கற்ற யாவையும் நழுவ விட்டு
நின்னையே நாடி நின்று நின்னுரு வைக்காண் பாயே. 5

கற்றும் பல்நூல்கள் தன்னைக் கருத்தெலாம் அறிந்த போதும்
பற்றியே நின்றா லன்றோ பயனதைப் பெறுவாய் நாடி
உற்றிடா ஞானம் பேசி எழுதியும் உபதேசித்துப்
பெற்றிடும் மதிப்பா லென்ன பேற்றினைப் பெறுவாய் நீயே. 6

படித்துநீ படித்து மிக்கப் பரிவுடன் மறையும் நூலை
முடித்திட வேதான் உன்னால் முடியுமோ முடித்த போதும்
விடுத்துநீ படித்த தெல்லாம் மேவிமெஞ் ஞான மார்க்கம்
பிடித்துநீ நின்றா லன்றோ பேற்றினைப் பெறுவாய் நீயே. 7

பத்தியும் கருமந் தன்னிற் பாலர்போல் முழுதும் நில்லா
வித்தைகள் தனிலும் நாளை வீணிலே கழிக்கா நீத்து
நித்தமும் உண்மை ஞான நிலைதனைப் பற்றி நின்றுன்
சித்தமும் தெளிவு பெற்றுப் பரநிலை சேர்வாய் நீயே. 8

தாரமும் பொருளும் சுற்றம் தனமதும் தேடிப் பெற்றுப்
பாரினில் என்ன இன்பம் படைத்தனை ஐயோ மிக்க
சீருறும் அறிவும் மேலாம் தேகமும் படைத்தும் வீணாய்த்
தாரினில் அழியா உந்தன் பதமதைச் சார்வாய் நீயே. 9

பொய்யதாம் துறவும் பொய்மைப் போதமும் தவமும் கொண்டே
மெய்யதாய் நடித்து மிந்த மேதினி மாந்தர் தொண்டு
செய்யவும் புகழும் பட்டம் போகமும் சேரப் பெற்றால்
உய்யவே கதியும் இன்பம் உடையதோ செப்பாய் நீயே. 10

உலகினை நோக்கா துன்னுள் ஒருமையாய் நோக்கிப் பார்த்தால்
நிலமதோர் காணா துண்மை நின்சுய வடிவம் காணும்
பலவிதக் காட்சி காணும் பற்பல உண்மை தோணும்
நலமுறும் நிலையும் இன்பம் நாடிடப் பெறுவாய் நீயே. 11

தனித்துநீ தனித்தே நோக்கிச் சந்ததம் அமர்ந்து யாதும்
நினைத்திடா மன தொடுக்கி நிர்க்குண மாக நின்ற
கணத்துட்பே ரறிவும் இன்பப் பரசுகம் காணும் மற்ற
அனைத்தையும் நீத்து மேலாம் அத்வித நிலை சேர்வாயே. 12

பாருறும் சீவ ரெல்லாம் பற்பல விதமென் றெண்ணாச்
சீருறும் உணர்வா லுன்றன் வடிவமாய்த் தெரிந்தே நன்றாய்த்

தேரியும் பேத மற்றிச் செகத்துறும் இயல்பும் நீத்து
நேரிமெ் பரமானந்த வடிவமாய் நிற்பாய் நீயே. 13

ஓர்கடல் நீரே விண்ணில் ஓங்கியே மாரி யென்னப்
பார்தனில் வீழ்ந்தே யெங்கும் பரவியே பாரில் நின்றும்
சேர்ந்திடும் குடங்க டோறும் செய்கைபோல் ஆன்மா ஒன்றே
சார்ந்திடும் சடங்க டோறும் தன்மய மெனக்காண் பாயே. 14

பரிதியும் ஒன்றே இந்தப் பாரினில் நிலவி யெங்கும்
தெரியவே நின்றும் இந்தச் செகத்தினிற் கடங்க டோறும்
உறுபுனல் தன்னுட் காணும் உண்மைபோற் பிரமம் ஒன்றே
கருவுடல் உயிர்க டோறும் கலந்திலங் கிடும்காண் பாயே. 15

சகத்தினிற் காணும் சீவர் சர்வமும் வடிவே யென்றுன்
அகத்தினுட் திடமாய்க் கொண்டே அது இது வென்பதற்று
மகத்துறும் உணர்வோ டென்றும் வழுவிடா நின்று மிந்தச்
செகத்துறும் இயல்பை நீத்துத் திகழ்ந்திடப் பெறுவாய் நீயே. 16

நல்லவர் தீயோரென்றும் நன்மையும் தீமை யென்றும்
பொல்லாஇவ் வுலகிற் காணும் இயல்பினைப் பொருந்தா நீத்து
எல்லாமும் சரியென் றெண்ணி இலங்குமெய் யறிவோ டுற்றுச்
சொல்லொணா இன்ப மாயுன் சொரூபமாய் வாழ்வாய் நீயே. 17

ஓடியும் ஓடி யெங்கும் உன்னுரு வைக்கா ணுமற்
தேடியும் அலையாப் பாழும் சிந்தையை ஒடுக்கி நின்று
நாடி நிர்க் குணமும் பெற்று நற்பர அறிவுந் தோன்றிக்
கூடுமெவ் வறிவா லுன்றன் வடிவினைக் கொள்வாய் நீயே. 18

தன்மய மாக இந்தச் சகத்தினைக் காண்பா யற்றேல்
சின்மய மாகக் காண்பாய்த் திடநிலை இல்லா விட்டால்
நன்மய மாகக் காண்பாய் நழுவிடிற் கனவாய்க் கண்டே
பன்மய மாகக் காணும் பற்றினைத் தீர்ப்பாய் நீயே. 19

கம்மென இருக்கா மிக்க கற்றும்பல் சமயம் சாதி
வம்பெனும் சண்டை தர்க்க வழியெலாம் நாடா விட்டு
அம்மெனும் நிலையோ டும்மென் றலறிடா ஓவென் றேதாம்
இம்மெனும் நிலையுட் சும்மா இருந்திடப் பெறுவாய் நீயே. 20

காண்பதும் கேட்ப தின்றிக் கருதுதல் செய்தல் மற்றும்
பூண்பதும் மற்றும் யாதும் போக்கியே பயனென் றில்லா
வீண்புறும் உலகத் தன்மை யாவையும் விலக்கி மேலாம்
மாண்புறும் நிலையுள் மோன வடிவமாய் வாழ்வாய் நீயே. 21

தன் சுய வடிவைக் காணாச் சகத்தினிற் பிறந்திறந்து
கன்மமும் பெற்று மிக்கக் கவலையுற் றனேக காலம்

ஜென்மமும் பலவாய்ப் பெற்றுத் திரிந்துழல்ன் றழியா நோக்கி
நின்சுய வடிவைப் பெற்று னிைதுமேற் கதிசேர் வாயே. 22

கானமாம் இருள் நிறைந்த மனமெனும் காட்டுள் மிக்க
ஈனமாம் கொடும் விலங்காம் இச்சைகா மாதி யெல்லாம்
ஞானமாம் அனலை மூட்டி நாடிமிவ் வனைத்தும் நீத்து
மோனமாம் வெளியுள் வீட்டில் முத்தனுய் வாழ்வாய் நீயே. 23

## அனுபவ இலக்கணம்

மனத்ததின் இலக்க ணத்தை வகையுடன் அறிந்து நன்றாய்
அனைத்திற்கும் மனதே உண்மைக் காரண மெனத் தெரிந்து
கணத்திலும் ஓடாச் சேர்த்துக் கருதியே ஒடுக்கி யெந்தத்
தினத்திலும் பழக்கி மேலாம் பரவழி சேர்ந்துற் றேனே. 1

பத்தியிற் செபம் தவத்திற் தியானத்திற் பழக்கி மிக்க
நித்தியம் அடக்கி நன்றாய் நேர்ந்த நற்பக்கு வத்திற்
சித்தமும் ஓர்மை யுற்றுத் தெளிவுடன் தூய்மை பெற்றுச்
சுத்தமெய் புணர்வுற் றீசன் சொரூபமும் கண்டுற் றேனே. 2

பரம்பொரு ளான ஈசன் காட்சியைப் பார்த்தும் பின்பு
இரண்டில்அப் பரமே தானுய் இலங்கிடப் பெற்றே யென்றும்
நிரந்தர மான இன்பப் பரசுகம் நேர்ந்து மிக்கத்
திரம்பெறும் மோன வீட்டுள் சேர்ந்துமாத் துயிலுற் றேனே. 3

துன்புடன் விஷமாய்ப் பேயாய்த் துஷ்டனுய்க் குரங்காய் நாயாய்
வம்புடன் பகையாய் நின்ற வலிமிகும் மனமும் இன்று
அன்பனுய்ப் பணியாள் மகவாய் அமுதமாய்க் கண்டாய் தேனுய்
இன்புடன் சுகமாய் யென்னுள் இலங்கிட யான்பெற் றேனே. 4

இச்சையும் மாயை பந்தம் இன்னலும் வினையு மிக்க
அச்சமும் பேத மற்றும் அகங்கார முதலா யெல்லாம்
பச்சமாய் யென்னைச் சூழ்ந்து வாட்டிய தெல்லாம் பறந்து
நிச்சலும் பரமா னந்த வடிவமாய் நின்றுற் றேனே. 5

மனமே நீ சுகமேவாழி மாசுவெபற் றலேர்தாய் முன்பு
தினமுனைத் திருத்தி மேலாம் பரவழி சேர்த் தொடுக்கிக்
கனவிலும் இன்ப முற்றேன் காணுணைக் காட்சி கண்டேன்
வினைமுதல் யாது மற்றென் வடிவமாய் விளங்கிட் டேனே. 6

தெரியாமல் அய்யோ இந்தச் செகத்தினில் அலைந்தும் கெட்டேன்
பரிவுடன் யெனைநீ ரன்பாய்ப் பழக்கியும் திருத்தி மேலாம்
அரியதாம் நிலையுட் சேர்த்தீர் அடங்கியும் ஒடுங்கித் தூய
உரியவென் வடிவுற் றின்ப உருவமாய்ப் பெற்றே னேனே. 7

பொய்யெலாம் மெய்யாய்க் கொண்டே பொருந்தியே குருடன்
அய்யகோ அனேக காலம் அல்லலுற் றலைந்து மேலும் [போன்றும்
உய்யவே உமை விடாது பந்தமுற் றுழன்றும் வாடச்
செய்தஇக் குற்றமெல்லாம் பொருத்தெனைச் சேர்ப்பீர் நீரே. 8

இருவினை மாயை யுற்றே இன்னலுற் றலைந்தே உண்மைக்
குருவினைத் தேடி நின்ற கொள்கையை அறிந்தே ஈசன்
திருவுரு வாக வந்தே திருப் பரங்கிரி மேற்கல்லால்
தருவடி அமர்ந் தளித்த தரிசனம் என்சொல் வேனே. 9

கல்லினு லடி யமர்ந்தும் கருதுதற் கெட்டா மோன
எல்லையில் லாப்பே ரின்ப நிலைதனை யெந்த னுக்குச்
சொல்லினுற் சொல்லாக் கையாற் காட்டியே சுகத்திற் சேர
வல்லவன் செய்த அந்த மகத்துவம் என்சொல் வேனே. 10

சருவமும் அற்றுச் சும்மா சௌக்யமா யிருப்பா யென்றே
சொரூபமாய் வந்தும் வாக்காற் சொல்லிடாக் குறிப்பாற் காட்ட
ஒருமையாய் அதனைப் பற்றி ஒடுங்கி அந்நிலையுட் சேர்ந்தேன்
பெருமைசே ரந்த மோன நிலையதின் பேறென் பேனே. 11

சும்மாநீ இருப்பா யென்றே சொன்னஇவ் வார்த்தை தன்னை
இம்மானி லத்தும் மாந்தர் இயம்புவார் அடையார் காணார்
அம்மாநா னிதனைப் பற்றி அதிதிட முடனே நின்று
வெம்மாயை முதலா யாதும் அற்றமா வெளியுற் றேனே. 12

பெரியதாம் வெளிக்கும் அப்பால் வெளியுறப் பெற்று மங்கே
உரியதாம் மோன வீட்டுள் ஒப்பில்மா மஞ்சம் தன்னில்
துரியமும் துரியா தீதம் கடந்தப்பாற் சொல்ல வொண்ணு
அரியதாம் நிலையுட் சும்மா ஆனந்தத் துயிலுற் றேனே. 13

என்னென்று சொல்வே னம்மா யான்பெற்ற சுகமும் பேற்றை
விண்ணவர் அயனும் மாலும் யாவரும் விள்ளார் மேவா
ரன்னிலை அதனைப் பெற்றும் அடிக்கடி நழுவி மீண்டும்
பின்னும் யான் அடைந்து மந்தப் பேரின்பத் துயிலுற்றேனே. 14

கறவையைக் காணுக் கன்றாய்க் காசினி தன்னில் நின்றேன்
பரம பொருள் கருணை வைத்துப் பரகுரு வடிவா யிந்தத்
தரணியோர் எவரும் காணுத் தருவடி யமர்ந்தும் பத்மக்
கரமதால் அளித்த மோனக் கனிதனைப் பெற்றுண் டேனே. 15

விண்ணவர் இந்திரன் மாலும் வேதனும் முனிவர் சித்தர்
மண்ணுறும் சீவர் யாரும் மறைமுதற் கருவி யெல்லாம்
எண்ணிலாக் காலம் தேடிக் காணெணு திறைவன் எந்தன்
கண்ணினுற் காண நின்ற கருணையை யென்சொல் வேனே. 16

துன்பமே வடிவா யுற்றுத் துடிதுடித் தலைந்த தற்று
இன்பமே வடிவாய்ப் பெற்றேன் இன்பத்தை ஆற்று மிக்கத்
தென்புடன் ஆடிப் பாடிச் செகத்தினிற் புரண்டும் ஓடி
உம்பரும் வியக்க யெங்கும் ஒப்பிலா விளங்கி னேனே. 17

நோக்கியே அமர்ந்த அந்த நொடிப்பொழு தினிலே என்னைத்
தூக்குதே விண்ணில் மேலாம் சுகானந்த நித்ரை வந்து
நீக்கமே இல்லா இந்த நித்திரை தன்னுள் என்றும்
சேர்க்குமோ சேர்த்தால் இந்தச் செகத்தவர்க் கென்சொல் வேனே

எங்குநா னெங்கும் தேடி எவ்விடந் தனிற்பார்த் தாலும்
அங்குவே றெதுவும் காணேன் அகிலமும் உருவும் காணேன்
கங்குலும் பகலும் காணேன் காலம் கற்பனையும் காணேன்
மங்கள வொளியாய் இன்பாய் வயங்கிட யான்கண் டேனே. 19

என்னையே நாடி நின்று என்சுய வடிவைக் கண்டேன்
பொன்னையே அன்றி இல்லாப் பூஷணம் போல எல்லாம்
தன்மய மாகக் கண்டேன் சர்வமும் தானாய்ப் பெற்றேன்
என்னதான் இனிமேல் வேண்டி இச்சையும் கொள்ளு வேனே. 20

சும்மாதான் இருக்கு மின்ப சுகமுமென் சொரூபம் பெற்றேன்
அம்மாநா னினிமேல் யாதும் கேட்பதும் அடைத லற்றேன்
வெம்மாயை முதலா யாதும் அற்றுநான் வேண்டு மட்டும்
இம்மானி லத்தில் முத்தி வடிவமாய் இலங்கு வேனே. 21

ஆனந்த வெள்ளம் எங்கும் அளவிலாப் பொங்கி நின்றே
வானுற முட்டி நின்றும் மாயையின் இருளாற் காணு
தீனமாம் போக முற்று இன்னலுற் றலைந்தே னுண்மை
ஞானமாம் ஒளியாற் கண்டே யானதுள் மூழ்கி னேனே. 22

சித்தமும் சுத்தம் பெற்றுத் திகழுமெய் யுணர்வை யுற்றுச்
சத்திய மான எந்தன் உருவினைத் தன்னுள் தேடி
நித்தியப் பொருளா யெங்கும் நிறைந்தபே ரின்பாய் நிற்கும்
சித்துரு வாக வெந்தன் உருவினைத் தெரிந்துற் றேனே. 23

தூங்கிடாத் தூங்கும் இன்ப சுகபர நிலையுள் என்றும்
நீங்கிடாத் தூங்கப் பெற்றேன் நித்திய முத்த னானேன்
ஈங்குஇந் நிலையுட் சேர யான்பட்ட பாட்டை யெல்லாம்
பாங்குடன் என்ன வென்று பகருவேன் பகரு வேனே. 24

உளமுறும் காட்டை நீத்து ஒழுங்குறச் சீர் திருத்தி
அளவுடன் அன்பு நீரிட் டரும்போத வித்தை நட்டுக்
களவுறும் மாயை சாராக் காத்துநற் பருவ முற்று
விளைவெனும் பூத்துக் காய்த்து வெம்பிடாப் பழுத்துண் டேனே 25

காடுடன் மலை கடந்தேன் கடலுடன் நதி கடந்தேன்
பாடுடன் தடை கடந்தேன் பயமுடன் யாது மற்றேன்
வீடுறும் வழியைக் கண்டே விரைவுடன் சென்று சேர்ந்து
நாடுமென் பவத்தை நீத்து நான்பர கதியுற் றேனே. 26

அல்லலும் பாடு மற்றேன் அலுப்புடன் களைப்பு மற்றேன்
தொல்லைசேர் யாது மற்றேன் தொல்பவப் பிணியு மற்றேன்
எல்லையில் லாதஇன்ப வென் சுய வடிவைப் பெற்றேன்
சொல்லவோ வொண்ணு மேலாம் சுகபர வீடுற் றேனே. 27

## உலகிற் கறிவுறுத்து மிலக்கணம்

பாரினிற் பவமு முற்றுப் பட்டுப்பட் டழிந்து மீண்டும்
நாரியர் பொருளைப் பொன்னை நாடியும் உடல் நானென்று
தாரினிற் பொய் மெய் காணுத் தவித்திடும் உலகீரய்யோ
வாரீரோ யெல்லாம் வந்தென் வழியையுற் றுணர்வீர் நீரே. 1

நாடுவீர் உண்மை யென்றே நான் சொலும் வழியில் நின்று
தேடுவீர் உணர்வா லுங்கள் வடிவினைத் தேடிப் பெற்றுக்
கூடுவீர் பரமானந்தம் கொண்டுமெப் போக முற்றே
ஆடுவீர் பாடி யென்றும் அத்வித மாய்நிற் பீரே. 2

அய்யகோ உலகிற் பாழும் அரும்பவ முற்ற லைந்தும்
உய்யவே வழிதே டாது உழல்கின்றீர் பிராணி போன்று
பொய்யுடன் துன்ப முற்ற வழிசெலும் புலனொடுக்கி
மெய்யதாம் உணர்வால் இன்ப மெய்வழி கொள்ளுவீரே. 3

அறிவினை அறியா வீணில் அலைந்திலா நாடி அந்த
அறிவினை அறிந்து சேரிற் கற்பனை அனைத்து மாழும்
அறிவினை அடைந்தால் உங்கள் உருவினை அடைந்து மந்த
அறிவினை உருவாய்ப் பெற்று ஆனந்த மாய்நிற் பீரே. 4

வாரிதி நீரும் விண்ணின் மாரியாய் வீழ்ந்தே இந்தப்
பாரினில் நதியின் மார்க்கம் கடலுறும் பான்மை போன்று
சீருறும் பரத்தில் தோன்றிச் செகத்தினில் வந்தீர் மீண்டும்
நேருறும் ஞான மார்க்கம் நின்றுமப் பரம்சேர் வீரே. 5

வீட்டினை விட்டே காட்டில் மேவியே இருளாற் பட்டோன்
காட்டினை விளக்கால் நீங்கிக் கடந்துதன் வீடு சேர்வான்
கூட்டினைப் போலஞ் ஞான இருள்தனில் அலையா நாடி
ஈட்டிமெய்ஞ் ஞானந் தன்னை வீடுற ஏகுவீரே. 6

கடல்தனில் வீழ்ந்தே மிக்க காலமாய்ப் பட்டோன் நல்ல
படவனுல் கரையிற் சேர்ந்து படைத்திடும் இன்பம் போலத்
தடமெனும் உலகிற் சென்ம சாகரம் தன்னுட் பட்டீர்
திடமுறும் உண்மை ஞானக் குருவினுற் கதிசேர் வீரே. 7

மாயையும் ஆசை மூன்றை மாவலி யதுதா னென்பீர்
ஆய்ந்துமெய் யுணர்வாற் பார்க்கில் அகத்துட்சங் கல்ப மாகும்
சாயைபோல் நின்றே மாற்றும் பொய்மையிற் சாரா துங்கள்
மேயதாம் உருவைப் பெற்ருல் விளங்கிடும் அனைத்தும் நீரே. 8

இருள்நிறை அறையுள் அந்த இருள் தனை நீக்க வேண்டி
அரும்பல படையாற் தாக்கித் தடியினுல் அடித்தும் தீரா
தொருசிறு விளக்கைக் கண்ட கணத்திலே ஒழியு மாப்போல்
திருவுறும் ஞானம் தோன்றில் தீருமா யைகாண் பீரே. 9

கனவதில் இன்ப துன்பம் இனும்பல காட்சி தோன்றும்
நினைவுறும் விழிப்பு வந்த நிமிஷமே பொய்யாய் நீங்கும்
மனமுறும் மருளும் மோக மயக்கமும் உலக வாழ்வும்
தனையுறும் ஞானம் தோன்றிற் சர்வம்பொய் யாய்க்காண் பீரே. 10

மனமுதற் சர்வம் நீத்து மௌனமா நிலையுட் சேர்ந்து
நினைவுடன் மறதியற்று நிர்க்குண முற்றே சும்மா
தனதுரு வாகித் தானுய்ச் சச்சிதா னந்த மாகத்
தினமும் நீர் வாழ வேண்டிற் செப்புமிம் வழிகொள் வீரே. 11

அகமதுட் தியான முற்றே அகமுதற் கருவி மற்றும்
சகமுறும் யாவும் நீத்துத் தன்மய மாகப் பெற்றுச்
சுகமுறும் சாந்த முற்றச் சொரூப மாயின் பாயென்றும்
இகபர முத்தி பெற்றே யாவரும் வாழ்வீர் நீரே. 12

